உ

சிவமயம்





பூழியர்கோன் வெப்பொழிந்த புகலியர்கேன் கழல் போற்றி
ஆழிமிசைக் கல்மிதப்பில் அணைந்தபிரான் அடிபோற்றி
வாழிதிருநாவலூர் வன் தொண்டர் பதம் போற்றி
ஊழிமலி திருவாதவூர் திருத்தாள் போற்றி !

– நால்வர் துதி

## சகல கிரக பீடைகள் நீங்குவதற்கும் ஆயுள் பலம் பெருகுவதற்கும் ஓதவேண்டிய பதிகம்

### கோளறு திருப்பதிகம்

பண் : பியந்தைக் காந்தாரம் (2–85) இராகம்: நவரோசு

திருச்சிற்றம்பலம்

1. வேயுறு தோளி பங்கன் விடம் உண்டகண்டன்
மிக நல்ல வீணை தடவி,
மாசறு திங்கள் கங்கை முடிமேல் அணிந்து, என்
உளமே புகுநத அதனால்
ஞாயிறு, திங்கள், செவ்வாய், புதன், வியாழம், வெள்ளி
சனி, பாம்பு இரண்டும் உடனே
ஆசுஅறும்; நல்ல நல்ல; அவை நல்ல நல்ல,
அடியர் அவர்க்கு மிகவே

2. என்பொடு கொம்பொடு ஆமை இவை மார்பு இலங்க
எருது ஏறி, ஏழை உடனே,
பொன்பொதி, மத்த மாலை புனல்சூடி வந்து, என்
உளமே புகுந்த அதனால்
ஒன்பதொடு ஒன்றொடு ஏழு பதினெட்டொடு, ஆறும்,
உடனாய நாள்கள் அவைதாம்,
அன்பொடு நல்லநல்ல ; அவை நல்லநல்ல
அடியார் அவர்க்கு மிகவே.

3. உருவளர் பவளமேனி ஒளிநீறு அணிந்து
உமையோடும், வெள்ளை விடைமேல்,
முருகு அலர்கொன்றை திங்கள் முடிமேல் அணிந்து என்
உளமே புகுந்த அதனால்,
திருமகள், கலை அது ஊர்தி, செயமாது, பூமி,
திசை தெய்வம் ஆன பலவும்,
அருநெறி நல்ல நல்ல ; அவை நல்ல நல்ல,
அடியார் அவர்க்கு மிகவே.

4. மதி நுதல் மங்கையொடு, வடஆல் இருந்து
மறை ஓதும் எங்கள் பரமன்,
நதியொடு கொன்றைமாலை முடிமேல் அணிந்து, என்
உளமே புகுந்த அதனால்
கொதி உறு காலன், அங்கி நமனோடு தூதர்
கொடு நோய்கள் ஆனபலவும்,
அதிகுணம் நல்ல நல்ல ; அவை நல்ல நல்ல,
அடியார் அவர்க்கு மிகவே.

5. நஞ்சு அணி கண்டன், எந்தை மடவாள்தனோடும்
விடை ஏறும், நங்கள் பரமன்,
துஞ்சு இருள், வன்னி, கொன்றை முடிமேல் அணிந்து என்
உளமே புகுந்த அதனால்
வெஞ்சின அவுணரோடும், உரும் – இடியும், மின்னும்
மிகையான பூதம் அவையும்,
அஞ்சிடும், நல்ல நல்ல ; அவை நல்ல நல்ல,
அடியார் அவர்க்கு மிகவே.

6. வாள்வரி அதள்அது ஆடைவரி கோவணத்தர்
மடவாள்தனோடும் உடன்ஆய்,
நாள்மலர் வன்னி கொன்றை நதிசூடி வந்து, என்
உளமே புகுந்த அதனால்,
கோள்அரி, உழுவையோடு, கொலையானை கேழல்,
கொடு நாகமோடு, கரடி,
ஆள்அரி, நல்ல நல்ல ; அவை நல்ல நல்ல,
அடியார் அவர்க்கு மிகவே.

7. செப்பு இளமுலை நல்மங்கை ஒருபாகமாக
விடைஏறு செல்வன் அடைவார்
ஒப்புஇள மதியும் அப்பும் முடிமேல் அணிந்து என்
உளமே புகுந்த அதனால்

வெப்பொடு, குளிரும் வாதம், மிகையான பித்தும்,
வினையான வந்து நலியா,
அப்படி நல்ல நல்ல ; அவை நல்ல நல்ல,
அடியார் அவர்க்கு மிகவே.

8. வேள்பட விழிசெய்து அன்று, விடைமேல் இருந்து
மடவாள்தனோடும் உடனாய்,
வாண்மதி வன்னி கொன்றை மலர்சூடி வந்த, என்
உளமே புகுந்த அதனால்
ஏழ்கடல் சூழ் இலங்கை அரையன் தனோடும்
இடர்ஆன வந்து நலியா ;
ஆழ்கடல் நல்ல நல்ல ; அவை நல்ல நல்ல,
அடியார் அவர்க்கு மிகவே.

9. பலபல வேடம் ஆகும்பரன், நாரிபாகன்,
பசு ஏறும் எங்கள் பரமன்,
சலமகளோடு எருக்கும் முடிமேல் அணிந்து என்
உளமே புகுந்த அதனால்,
மார்மிசை யோனும் மாலும் மறையோடு தேவர்
வருகாலம் ஆன பலவும்
அலைகடல், மேரு நல்ல ; அவை நல்ல நல்ல,
அடியார் அவர்க்கு மிகவே.

10. கொத்து அலர் குழலியோடு விசயற்கு நல்கு
குணம் ஆய வேட விகிர்தன்,
மத்தமும் மதியும் நாகம் முடிமேல் அணிந்து, என்
உளமே புகுந்த அதனால்,
புத்தரொடு அமணை வாதில் அழிவிக்கும் அண்ணல்
திருநீறு செம்மை திடமே
அத்தகு நல்ல நல்ல ; அவை நல்ல நல்ல,
அடியார் அவர்க்கு மிகவே.

11. தேன் அமர் பொழில்கொள் ஆலைவிளை செந்நெல் துன்னி,
 வளர் செம்பொன் எங்கும் நிகழ,
நான்முகன் ஆதி ஆய பிரமா புரத்து
 மறைஞான ஞான முனிவன்,
தான்உறு கோளும் நாளும் அடியாரை வந்து
 நலியாத வண்ணம் உரைசெய்
ஆனசொல் மாலை ஓதும் அடியார்கள் வானில்
 அரசு ஆள்வர், ஆணை நமதே.

திருச்சிற்றம்பலம்

## பொருளாதாரநிலை சீர்பெறுவதற்கும், வறுமை நீங்குவதற்கும் ஓதவேணடிய பதிகம்

இடம் : திருவாவடுதுறை

இறைவன் மாசிலா மணீசுவரர் இறைவி : ஒப்பிலாமுலைஅம்மை

பண் : காநதாரப்பஞ்சமம் [3–4] இராகம்: கேதாரகௌளை

திருச்சிற்றம்பலம்

1. இடரினும் தளரினும் எனது உறு நோய்
தொடரினும் உனகழல் தொழுது எழுவேன்;
கடல்தனில் அமுதொடு கலநத நஞ்சை
மிடறினில் அடக்கியவேதியனே.

இதுவோ எமை ஆளுமாறு? ஈவது ஒன்று எமக்கு இல்லையேல்டு அதுவோ உனது இன்னருள்? ஆவடுதுறை அரனே.

2. வாழினும் சாவினும் வருந்தினும் போய்;
வீழினும் உனகழல் விடுவேன் அல்லேன்;
தாழ்இளம் தடம்புனல் தயங்கு சென்னிப்
போழ் இளமதி வைத்த புண்ணியனே.

இதுவோ எமை ஆளுமாறு? ஈவது ஒன்று எமக்கு இல்லையேல் அதுவோ உனது இன்னருள்? ஆவடுதுறை அரனே.

3. நனவினும் கனவினும் நம்பா, உன்னை
மனவினும் வழிபடல் மறவேன், அம்மான்
புனல்வரி நறுங் கொன்றைப் போது அணிந்த
கனல்எரி அனல்புல்கு கையவனே.

இதுவோ எமை ஆளுமாறு? ஈவது ஒன்று எமக்கு இல்லையேல் அதுவோ உனது இன்னருள்? ஆவடுதுறை அரனே.

4. தும்மலொடு அருந்துயர் தோன்றிடினும்
அம்மலர் அடிஅலால், அரற்றாது என்நா;
கைம்மல்கு வரிசிலைக் கணை ஒன்றினால்
மும்மதில் எரி எழ முனிந்தவனே.

இதுவோ எமை ஆளுமாறு? ஈவது ஒன்று எமக்கு இல்லையேல் அதுவோ உனது இன்னருள்? ஆவடுதுறை அரனே.

5. கையது வீழினும் கழிவு உறினும்
செய்கழல் அடிஅலால் சிந்தை செய்யேன்
கொய் அணி நறுமலர் குலாய சென்னி
மைஅணி மிடறு உடை மறையவனே.

இதுவோ எமை ஆளுமாறு? ஈவது ஒன்று எமக்கு இல்லையேல் அதுவோ உனது இன்னருள்? ஆவடுதுறை அரனே.

6. வெந்துயர் தோன்றி ஓர் வெருஉறினும்
எந்தாய், உன் அடிஅலால் ஏத்தாது, என் நா;
ஐந்தலை அரவு கொண்டு அரைக்கு அசைத்த
சந்தவெண் பொடிஅணி சங்கரனே.

இதுவோ எமை ஆளுமாறு? ஈவது ஒன்று எமக்கு இல்லையேல் அதுவோ உனது இன்னருள்? ஆவடுதுறை அரனே.

7. வெப்பொடு விரவி ஓர் வினை வரினும்
அப்பா உன் அடி அலால் அரற்றாது, என்நா ;
ஒப்புடை உருவனை உரு அழிய
அப்படி அழல் எழ விழித்தவனே.

இதுவோ எமை ஆளுமாறு? ஈவது ஒன்று எமக்கு இல்லையேல்
அதுவோ உனது இன்னருள்? ஆவடுதுறை அரனே.

8. பேர் இடர் பெருகி, ஓர் பிணி வரினும்
சீர் உடைக் கழல் அலால், சிந்தை செய்யேன்;
ஏர் உடை மணி முடி இராவணனை
ஆர் இடர் பட, வரை அடர்த்தவனே.

இதுவோ எமை ஆளுமாறு? ஈவது ஒன்று எமக்கு இல்லையேல்
அதுவோ உனது இன்னருள்? ஆவடுதுறை அரனே.

9. உண்ணினும் பசிப்பினும் உறங்கினும் நின்
ஒண்மலர் அடிஅலால் உரையாது, என் நா ;
கண்ணனும் கடிகமழ் தாமரை மேல்
அண்ணலும் அளப்பு அரிது ஆயவனே.

இதுவோ எமை ஆளுமாறு? ஈவது ஒன்று எமக்கு இல்லையேல்
அதுவோ உனது இன்னருள்? ஆவடுதுறை அரனே.

10. பித்தொடு மயங்கி ஓர் பிணி வரினும்
அத்தா உன்அடி அலால் அரற்றாது என்நா
புத்தரும் சமணரும் புறன் உரைக்கப்
பத்தர்கட்கு அருள் செய்து பயின்றவனே.

இதுவோ எமை ஆளுமாறு? ஈவது ஒன்று எமக்கு இல்லையேல்
அதுவோ உனது இன்னருள்? ஆவடுதுறை அரனே.

11. அலைபுனல் ஆவடு துறைஅமர்ந்த
இலைநுனை வேல்படை எம் இறையை
நலம்மிகு ஞானசம் பந்தன் சொன்ன
விலைஉடை அருந்தமிழ் மாலை வல்லார்.

வினை ஆயின நீங்கிப்போய் விண்ணவர் வியன் உலகம்
நிலையாக முன்ஏறுவர் ; நிலைமிசை நிலைஇலரே.

திருச்சிற்றம்பலம்

## தடைபடும் திருமணம் சடுதியில் கூடிவருவதற்கு ஓதவேண்டிய பதிகம்

**இடம் : திருவேதிகுடி**

**இறைவன் : வேதபுரீசுவரர்** **இறைவி: மங்கையர்க்கரசி**

**பண் : சாதாரி (3–78)** **இராகம் : பந்துவராளி**

திருச்சிற்றம்பலம்

1. நீறுவரி ஆடுஅரவொடு ஆமை மனவு
என்புநிரை பூண்பர் இடபம்
ஏறுவர் யாவரும் இறைஞ்சு கழல்
ஆதியர் இருந்த இடமாம்
தாறுவிரி பூகம்மலி வாழை விரை
நாறஇணை வாளை மடுவில்
வேறுபிரியாது விளையாட வளம்
ஆரும் வயல் வேதிகுடியே.

2. சொற்பிரிவு இலாதமறை பாடி நடம்
ஆடுவர் தொல் ஆணை உரிவை
மற்புரி புயத்து இனிது மேவுவர் எந்
நாளும்வளர் வானவர் தொழத்
துற்புஅரிய நஞ்சு அமுதமாக முன்அயின்றவர்
இயன்ற தொகுசீர்
வெற்புஅரையன் மங்கைஒரு பங்கர்நகர்
என்பர்திரு வேதிகுடியே.

3. போழும்மதி பூண்அரவு கொன்றை மலர்
துன்றுசடை வென்றி புகமேல்
வாழும்நதி தாழும் அருளாளர் இருள்
ஆர்மிடறர் மாதர் இமையோர்
சூழும்இரவாளர் திருமார்பில் விரிநூலர்
வரிதோலர் உடைமேல்
வேழஉரி போர்வையினர் மேவுபதி
என்பர்திரு வேதிகுடியே.

4. காடர்கரி காலர்கனல் கையர் அனல்
மெய்யர்உடல் செய்யர் செவியில்
தோடர் தெரி கீளர்சரி கோவணவர்
ஆவணவர் தொல்லை நகர்தான்
பாடல் உடையார்கள் அடியார்கள்
மலரோடு புனல் கொண்டு பணிவார்
வேடம் ஒளி ஆனபொடி பூசிஇசை
மேவுதிரு வேதிகுடியே.

5. சொக்கர் துணை மிக்க எயில் உக்கு அற
முனிந்து தொழு மூவர் மகிழத்
தக்க அருள் பக்கம் உற வைத்த அரனார்
இனிது தங்கும் நகர்தான்
கொக்கு அரவம் உற்ற தொழில் வெற்றி நிழல்
பற்றி வரி வண்டு இசை குலாம்
மிக்க அமரர் மெச்சி இனிது அச்சம் இடர்
போக நல்கு வேதிகுடியே.

6. செய்யதிரு மேனிமிசை வெண்பொடி அணிந்து
கருமான் உரியை போர்த்து
ஐயம் இடும் என்று மடமங்கை யொடு
அகம் திரயும் அண்ணல் இடமாம்
வையம் விலை மாறிடினும் ஏறுபுகழ்
மிக்க இழிவு இலாதவகையார்
வெய்ய மொழி தண்புலவருக்கு உரை
செயாத அவர் வேதிகுடியே.

7. உன்னி இரு போதும் அடி பேணும் அடியார்
தம் இடர் ஒல்கு அருளித்
துன்னி ஒரு நால்வருடன் ஆல் நிழல்
இருந்து துணை வன்தன் இடமாம்
கன்னிய ரொடு ஆடவர்கள் மாமனம்
விரும்பி அரு மங்கலம் இக
மின்இயலும் நுண்இடை நல் மங்கையர்
இயற்று பதி வேதிகுடியே.

8. உரக்கரம் நெருப்பு எழ நெருக்கி வரை
பற்றிய ஒருத்தன் முடிதோள்
அரக்கனை அடர்ந்தவன் இசைக்கு இனிது
நல்கி அருள் அங்கணன் இடம்
முருக்கு இதழ் மடக்கொடி மடந்தையரும்
ஆடவரும் மொய்த்த கலவை
விரைக்குழல் மிகக்கமழ விண்இசை
உலாவுதிரு வேதிகுடியே.

9. பூவின்மிசை அந்தணனொடு ஆழிபொலி
அங்கையனும் நேட எரிஆய்த்
தேவும்இவர் அல்லர் இனி யாவர்என
நின்று திகழ் கின்றவர்இடம்
பாவலர்கள் ஓசை இயல் கேள்விஅது
அறாத கொடையார் பயில்வாம்
மேவுஅரிய செல்வம்நெடு மாடம்வளர்
வீதி நிகழ் வேதிகுடியே.

10. வஞ்சஅமணர் ரேர் மதிகேடர் தம்மனத்து
அறிவிலாதவர் மொழி
தஞ்சம்என என்றும் உணராத அடியார்
கருது சைவன் இடமாம்
அஞ்சுபுலன் வென்று அறுவகைப் பொருள்
தெரிந்துஎழு இசைக்கிளவியால்
வெஞ்சினம் ஒழித்தவர்கள் மேவி
நிகழ்கின்ற திருவேதிகுடியே.

11. கந்தம்மலி தண்பொழில் நல்மாடம் மிடை
காழி வளர் ஞானம் உணர்சம்
பந்தன்மலிசெந்தமிழின் மாலைகொடு
வேதிகுடி ஆதி கழலே
சிந்தைசெய வல்லவர்கள் நல்லவர்கள்
என்ன நிகழ்வு எய்தி இமையோர்
அந்த உலகு எய்தி அரசு ஆளும் அதுவே
சரதம் ஆணை நமதே.

திருச்சிற்றம்பலம்

## மக்கட்செல்வம் வாய்க்கப் பெறுவதற்கு ஓதவேண்டிய பதிகம்.

இடம் : திருவெண்காடு
இறைவன் : சுவேதாரண்யேசுவரர் இறைவி : பிரம்மவித்யா நாயகி
பண் : சீகாமரம் (2-48) இராகம் : நாதநாமக்கிரியை

திருச்சிற்றம்பலம்

1. கண் காட்டும் நுதலானும், கனல்
காட்டும் கையானும்,
பெண் காட்டும் உருவானும்,
பிறை காட்டும் சடையானும்
பண் காட்டும் இசையானும் பயிர்
காட்டும் புயலானும்
வெண் காட்டில் உறைவானும், விடை
காட்டும் கொடியானே.

2. பேய் அடையா, பிரிவு எய்தும்;
 பிள்ளையினோடு உள்ளம் நினைவு
ஆயினவே வரம் பெறுவர் ; ஐயுற
 வேண்டா ஒன்றும் ;
வேயனதோள் உமை பங்கன் வெண்காட்டு
 முக்குள நீர்,
தோய்வினையார் அவர் தம்மைத்
 தோயாவாம், தீவினையே.

3. மண்ணொடு நீர், அனல், காலோடு
 ஆகாயம், மதி, இரவி,
எண்ணில் வரும் இயமானன், இக
 பரமும், எண்திசையும்
பெண்ணினொடு ஆண் பெருமையொடு
 சிறுமையும், ஆம் பேராளன்
விண்ணவர்கோன் வழிபட, வெண்காடு
 இடமா விரும்பினனே.

4. விடம் உண்ட மிடற்று அண்ணல்
 வெண்காட்டின் தண்புறவின்
மடல் விண்ட முடத்தாழை மலர் நிழலைக்
 குருகு என்று
தடம் மண்டு துறைக்கெண்டை,
 தாமரையின் புமறையக்
கடல் விண்ட கதிர் முத்தம் நகை
 காட்டும் காட்சியதே.

5. வேலை மலி தண்கானல் வெண்
காட்டான் திருவடிக்கீழ்
மாலை மலி வண்சாந்தால் வழிபடு
நல் மறையவன்தன்
மேல் அடர்வெங்காலன் உயிர் விண்ட
பினை, நமன் தூதர்,
ஆலமிடற்றான் அடியார் என்று,
அடர அஞ்சுவரே.

6. தன்மதியும் வெய்யரவும் தாங்கினான்,
சடையின் உடன்;
ஒன்மதிய நுதல் உமை ஓர்
கூறுஉகந்தான்; உறைகோயில்
பண்மொழியால் அவன் நாமம் பல
ஓதப், பசுங்கிள்ளை
வெண்முகில் சேர் கரும்பெனை மேல்
வீற்றிருக்கும் வெண்காடே.

7. சக்கரம் மாற்கு ஈந்தானும்,
சலந்தரனைப் பிளந்தானும்,
அக்கு அரைமேல் அசைத்தானும்
அடைந்து அயிராவதம்பனிய
மிக்க அதனுக்கு அருள் சுரக்கும்
வெண்காடும் வினைதுரக்கும்
முக்குளம் நன்கு உடையானும்,
முக்கண்உடை இறையவனே.

8. பண்மொய்த்த இன்மொழியாள்,
பயம்எய்த மலைஎடுத்த
உன்மத்தன் உரம் நெரித்து, அன்று
அருள்செய்தான் உறைகோயில்,
கண்மொய்த்த கரு மஞ்ஞை
நடம்ஆடக், கடல் முழங்க
விண்மொய்த்த பொழில் வரிவண்டு
இசைமுரலும் வெண்காடே.

9. கள்ஆர்செங் கமலத்தான்
கடல்கிடந்தான், என இவர்கள்
ஒள் ஆண்மை கொளற்கு ஓடி, உயர்ந்து
ஆழ்ந்தும், உணர்வு அரியான் ;
வெள் ஆனை தவம் செய்யும் மேதகு வெண்
காட்டான் என்று
உள்ஆடி உருகாதார்
உணர்வு உடைமை, உணரோமே.

10. போதியர்கள் பிண்டியர்கள் மிண்டு
மொழிபொருள் என்னும்
பேதையர்கள் அவர்; பிறிமின்;
அறிவுடையீர், இதுகேள்மின்;
வேதியர்கள் விரும்பியசீர்
வியன் திருவெண்காட்டான் என்று
ஓதியவர் யாதும் ஒரு தீது இலர்
என்று உணருமினே.

11. தண் பொழில் சூழ் சண்பையர்கோன்,
தமிழ்ஞான சம்பந்தன்,
விண் பெலி வெண் பிறைச் சென்னி
விகர்தன்உறை வெண்காட்டைப்,
பண் பொலி செந் தமிழ் மாலை
பாடியபத்து இவை வல்லார்,
மண்பொலிய வாழ்ந்தவர், போய
வான்பொலியப புகுவாரே.

திருச்சிற்றம்பலம்.

## இரத்த அழுத்த நோய் தீரவும், தீவினைகள் நீங்கவும் சிவபுண்ணியம் பெற பாராயணம் ஓதவேண்டிய பதிகம்.

### பஞ்சாக்கரத் திருப்பதிகம்

திருத்தலம் : திருநின்றவூர்
பண் : காந்தாரப்பஞ்சமம் (3–22) இராகம் : கேதாரகௌளை

திருச்சிற்றம்பலம்

1. துஞ்சலும் துஞ்சல் இல்லாத போழ்தினும்
நெஞ்சகம் நைந்து நினைமின், நாள்தோறும் ;
வஞ்சகம் அற்று அடி வாழ்த்த, வந்த கூற்று
அஞ்ச உதைத்தன, அஞ்சு எழுத்துமே.

2. மந்திரம் நான்மறை ஆகி, வானவர்
சிந்தையுள் நின்று, அவர்தம்மை ஆள்வன ;
செந்தழல் ஓம்பிய செம்மை வேதியர்க்கு
அந்தியுள் மந்திரம் அஞ்சு எழுத்துமே.

3. ஊனில் உயிர்ப்பை ஒடுக்கி, ஒண்சுடர்
ஞான விளக்கினை ஏற்றி, நன்புலத்து
ஏனை வழிதிறந்து ஏத்துவார்க்கு, இடர்
ஆன கெடுப்பன, அஞ்சு எழுத்துமே.

4. நல்லவர் தீயர் எனாது, நச்சினர்
செல்லல் கெடச் சிவமுத்தி காட்டுவ ;
கொல்ல நமன்தமர் கொண்டு போம் இடத்து
அல்லல் கெடுப்பன, அஞ்சு எழுத்துமே.

5. கொங்குஅலர் வன்மதன் வாளிஐந்து; அகத்து
அங்குள பூதமும் அஞ்ச ; ஐம் பொழில்
தங்கு அரவின் படம் அஞ்சும் ; தம் உடை
அங்கையில் ஐவிரல் : அஞ்சு எழுத்துமே.

6. தும்மல் இருமல் தொடர்ந்த போழ்தினும்
வெம்மை நரகம் விளைந்த போழ்தினும்
இம்மை வினை அடர்த்து எய்தும் போழ்தினும்
அம்மையினும் துணை அஞ்சு எழுத்துமே.

7. வீடு பிறப்பை அறுத்து மெச்சினர்;
பீடை கெடுப்பன ; பின்னை நாள்தொறும்
மாடு கொடுப்பன ; மன்னு மாநடம்
ஆடி உகப்பன ; அஞ்சு எழுத்துமே.

8. வண்டு அமர் ஓதி மடந்தை பேணின,
பண்டை இராவணன் பாடி உய்ந்தன ;
தொண்டர்கள் கொண்டு துதித்தபின், அவர்க்கு
அண்டம்அளிப்பன அஞ்சு எழுத்துமே.

9. கார்வணன், நான்முகன், காணுதற்கு ஒணாச்
சீர்வணச் சேவடி செவ்வி, நாள்தொறும்
பேர்வணம் பேசிப் பிதற்றும் பித்தர்கட்கு
ஆர்வணம் ஆவன, அஞ்சு எழுத்துமே.

10. புத்தர், சமண் கழுக்கையர், பொய்கொளாச்
சித்தத் தவர்கள் தெளிந்து தேறின
வித்தக நீறு அணிவார் வினைப் பகைக்கு
அத்திரம் ஆவன அஞ்சு எழுத்துமே.

11. நற்றமிழ் ஞானசம்பந்தன் நால்மறை
கற்றவன் காழியர் மன்னவ உன்னிய
அற்றம்இல் மாலை ஈர்ஐந்தும் அஞ்சு எழுத்து
உற்றன வல்லவர் உம்பர் ஆவரே.

திருச்சிற்றம்பலம்.

## மாணிக்கவாசகப் பெருமான் அருளிய 8ம் திருமுறை
## திருவாசகம்

குடும்பங்களில் ஏற்படும் குழப்பங்கள், மனக்கவலைகள் யாவும் ஒழிந்து, அமைதியும் ஆனந்தமும் உண்டாகும். வீட்டில் உள்ளவர்களே சேர்ந்து காலை, மாலை தினமும் இப்பாடலை பாராயாணம் செய்வது மிகுந்த பயனை நல்கும். வீடு லட்சுமி வசிக்கும் இடமாகத் திகழும் என்பது உண்மை.

### சிவபுராணம்

ராகம் : மோகனம்

நமச்சிவாய வாஅழ்க நாதன்தாள் வாழ்க
இமைப்பொழுதும் என்நெஞ்சில் நீங்காதான் தாள்வாழ்க
கோகழி யாண்ட குருமணிதன் தாள்வாழ்க
ஆகம மாகிநின்று அண்ணிப்பான் தாள் வாழ்க
ஏகன் அநேகன் இறைவன் அடிவாழ்க
வேகம் கெடுத்தாண்ட வேந்தன் அடி வெல்க
பிறப்பறுக்கும் பிஞ்ஞகன்தன் பெய்கழல்கள் வெல்க
புறத்தார்க்குச் சேயோன்தன் பூங்கழல்கள் வெல்க கரம்குவிவார்
உள் மகிழும் கோன்கழல்கள் வெல்க
சிரம்குவிவார் ஓங்குவிக்கும் சீரோன் கழல் வெல்க
ஈசன் அடிபோற்றி எந்தை அடிபோற்றி
தேசன் அடிபோற்றி சிவன்சே வடிபோற்றி
நேயத்தே நின்ற நிமலன் அடிபோற்றி
மாயப் பிறப்பறுக்கும் மன்னன் அடிபோற்றி
சீரார் பெருந்துறைநம் தேவன் அடிபோற்றி
ஆராத இன்பம் அருளுமலை போற்றி
சிவன் அவன் என் சிந்தையுள் நின்ற அதனால்
அவன் அருளாலே அவன்தாள் வணங்கிச்
சிந்தை மகிழச் சிவபுரா ணந்தன்னை
முந்தை வினைமுழுதும் ஓய உரைப்பன்யான்
கண்ணுதலான் தன்கருணைக் கண்காட்ட வந்தெய்தி

எண்ணுதற் கெட்டா எழிலார் கழலிறைஞ்சி
விண்ணறைந்து மண்ணிறைந்து மிக்காய் விளங்கொளியாய்
எண்ணிறந் தெல்லை யிலாதானே நின்பெருஞ்சீர்
பொல்லா வினையேன் புகழுமாறு ஒன்றறியேன்
புல்லாகிப் பூடாய்ப் புழுவாய் மரமாகிப்
பல்விருக மாகிப் பறவையாய்ப் பாம்பாகிக்
கல்லாய் மனிதராய்ப் பேயாய்க் கணங்களாய்
வல்அசுர ராகி முனிவராய்த் தேவராய்ச்
செல்லாஅ நின்ற இத்தாவர சங்கமத்துள்
எல்லாப் பிறப்பும் பிறந்திளைத்தேன் எம்பெருமான்
மெய்யேஉன் பொன்னடிகள் கண்டின்று வீடுற்றேன்
உய்யஎன் உள்ளத்துள் ஓங்கார மாய்நின்ற
மெய்யா விமலா விடைப்பாகா வேதங்கள்
ஐயா எனஓங்கி ஆழ்ந்தஅகன்ற நுண்ணியனே
வெய்யாய் தணியாய் இயமான னாம்விமலா
பொய்யா யினவெல்லாம் போயகல வந்தருளி
மெய்ஞ்ஞான மாகி மிளிர்கின்ற மெய்ச்சுடரே
எஞ்ஞானம் இல்லாதேன இன்பப் பெருமானே
அஞ்ஞானம் தன்னை அகல்விக்கும் நல்லறிவே
ஆக்கம் அளவு இறுதி இல்லாய் அனைத்துலகும்
ஆக்குவாய் காப்பாய் அழிப்பாய் அருள் தருவாய்
போக்குவாய் என்னைப் புகுவிப்பாய்நின் தொழும்பின்
நாற்றத்தின் நேரியாய் சேய்ய் நணியானே
மாற்றம் மனங்கழிய நின்ற மறையோனே
கறந்தபால் கன்னலோடு நெய்கலந்தார் போலச்
சிறந்தடியார் சிந்தனையுள் தேனூறி நின்று
பிறந்த பிறப்பறுக்கும் எங்கள் பெருமான்
நிறங்கள் ஓர் ஐந்துடையாய் விண்ணோர்கள் ஏத்த
மறைந்திருந்தாய் எம்பெருமான் வல்வினையேன் தன்னை

மறைந்திட மூடிய மாய இருளை
அறம்பாவம் என்னும் அருங்கயிற்றால் கட்டிப்
புறந்தோல் போர்த்தெங்கும் புழு அழுக்கு மூடி
மலஞ்சோரும் ஒன்பது வாயிற் குடிலை
மலங்கப் புலனைந்தும் வஞ்சனையைச் செய்ய
விலங்கு மனத்தால் விமலா உனக்குக்
கலந்த அன்பாகிக் கசிந்து உள் உருகும்
நலந்தான் இலாத சிறியேற்கு நல்கி
நலந்தன் மேல் வந்தருளி நீள்கழல்கள்கர அட்டி
நாயிற் கடையாய்க் கிடந்த அடியேற்குத்
தாயிற் சிறந்த தயாவான தத்துவனே
மாசற்ற சோதி மலர்ந்த மலர்ச்சுடரே
தேசனே தேன் ஆர் அமுதே சிவபுரனே
பாசமாம் பற்றறுத்துப் பாரிக்கும் ஆரியனே
நேச அருள் புரிந்து நெஞ்சில் வஞ்சம் கெடப்
போராது நின்ற பெருங்கருணைப் பேராறே
ஆரா அமுதே அளவிலாப் பெம்மானே
ஓராதார் உள்ளத்து ஒளிக்கும் ஒளியானே
நீராய் உருக்கிஎன் ஆருயிராய் நின்றானே
இன்பமும் துன்பமும் இல்லானே உள்ளானே
அன்பருக்கு அன்பனே யாவையுமாய் அல்லையுமாம்
சோதியனே துன்னிருளே தோன்றாப் பெருமையனே
ஆதியனே அந்தம் நடுவாகி அல்லானே
ஈர்த்து என்னை ஆட்கொண்ட எந்தை பெருமானே
கூர்த்த மெய்ஞ்ஞானத்தால் கொண்டுணர்வார் தம் கருத்தின்
நோக்கரிய நோக்கே நுணுக்கரிய நுண்ணுணர்வே
போக்கும் வரவும் புணர்வும் இலாப் புண்ணியனே
காக்கும் எம் காவலனே காண்பரிய பேர் ஒளியே
ஆற்றின்ப வெள்ளமே அத்தா மிக்காய் நின்ற

தோற்றச் சுடர் ஒளியாய்ச் சொல்லாத நுண் உணர்வாய்
மாற்றமாம் வையகத்தின் வெவ்வேறே வந்து அறிவாம்
தேற்றனே தேற்றத் தெளிவே என் சிந்தனையுள்
ஊற்றான உண்ணார் அமுதே உடையானே
வேற்று விகார விடக்குடம்பின் உட்கிடப்ப
ஆற்றேன்எம் ஐயா அரனே ஓ என்று என்று
போற்றிப் புகழ்ந்திருந்து பொய்கெட்டு மெய்யானார்
மீட்டு இங்கு வந்து வினைப்பிறவி சாராமே
கள்ளப் புலக்குரம்பைக் கட்டழிக்க வல்லானே
நள்ளிருளில் நட்டம் பயின்றாடும் நாதனே
தில்லையுள் கூத்தனே தென்பாண்டி நாட்டானே
அல்லற் பிறவி அறுப்பானே ஓ என்று
சொல்லற்கு அரியானைச் சொல்லித் திருவடிக்கீழ்ச்
சொல்லிய பாட்டின் பொருள் உணர்ந்து சொல்லுவார்
செல்வர் சிவபுரத்தின் உள்ளார் சிவனடிக்கீழ்ப்
பல்லோரும் ஏத்தப் பணிந்து.

திருச்சிற்றம்பலம்



